ஸ்ரீ:

# முகவுரை

ஸ்ரீ மஹா பாரதத்தின் பர்வ வரி சயில் மூன்றாவதும் அளபில் இரண்டாவதுமாகிய வன பர்வத்தின் முதற் பகுதி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் பெருங்கருணையால் பூர்த்தியாகி வெளி ந்ததில் ஸ்ரீ மஹாபாரத அபிமானிகள் பெரு மகிழ்ச்சி அடைவார்கள். முன் புஸ்த ம் வெளி ந்து ஒன்றரை வருஷமான பின் இது வெளிவந்தாலும் வராமலே நின்றுபோவதைக் காட்டிலும் தாமதித்தாகிலும் வெளிவந்ததில் பெரியோர்கள் திருப்தி அடைவார்களென்பது நிச்சயம். பல ருஷ ளின் முன்னரே செய்துவைத்திருந்த மொழிபெயர்ப்பு பல இடங்களில் மாற்றியும் விளக்கியும் எழுதவேண்டியிருந்தமையாலும் அப்படிச் செய்வதி பல க ஸ்ரமங்களிருந்த மையாலும் புதிதா வே மொழிபெயர்த்து அச்சிட நேர்ந்தது. மற்றப் பர் களை வெளியிட்டலிருந்த பொருள் முட்டுப்பாடு முதலிய ஸ்ரமங்களுடன் இந்த ரமமும் சேர்ந்த மயால் இந்தப் புஸ்தகத் த வெளியிட்டதில் ரமம் பல மடங்கு அதிகமாயிற்று. எப்படியானாலும் கடவுள் க்ருபையால் இது பூர்த்தியாகி வெ ளி ந்ததில் எல்லா ஸ்ரமங்களையும் மறந்து பரம திருப்தி அடைகிறேன்.

வியாகர வே தாந்த சாஸ்திர பார கதரும் பாகவத பவத் கீதோபந்யாஸகரும் சோதிட மந்திர சாஸ்திர வித்வானும் ஆர்யமத ஸம்வர்த்தனீ பத்திராதிபருமான ப்ரம்மஸ்ரீ டல குடி நடேச சாஸ்திரி ளவர் ள் ஸ்ரீ மஹா பாரதத்திலுள்ள பேரபிமானத்தினால் வ பர் மொழிபெயர்ப்புவேலை யப்பரமதிருப்தியோடு ஏற்று கொண்டு வி ரவில் மொழிபெயர்த்துப் பதினாறு வருஷங்களுக்கு முன்னரே கொடுத்ததுமன்றி 77 . து அத்யாய முடிய இரண்டாமுறை பார்த்துச் செய்யவே ண்டுவனவற்றைச் செய்தும் கொடுத்தார்கள். அ வர் ள் இப்பொழுது பெரு ாரியத்தை மேற்கொண்டு நடத்திவருகிறார் ளா யால் அதனோடு இந்த வனபர்வத்தில் மேலுள்ள பாகத்தையும் சேர்த்துச் செய்ய அவர்களுக்கு ஸௌகர்யப்படவில்லை. அவர்கள் நடத்திவருகிற

பெரு காரியம் பூர்த்தியாதற்குச் சில காலம் ஆகுமென்று தோன்றின மையாலும் அதுவரையில் இந்த வேலையை நிறுத்தி வக்கக் கூடா மையாலும் வேறொருவரைக்கொண்டு புதிதாக மொழி பெயர்ப்பது அவசியமாயிற்று. சாஸ்திரிகளவர்களும் அதற்கு அனுமதியளித்தார்கள். அவர்களுடைய பேருதவியை என்றும் மறவேன்.

திரிசிரபுரம் ஸெ ட் ஜோஸப் காலெஜ் பிரதம ஸம்ஸ்கிருத ப டிதர் மஹா வித்துவான் ஸாரஸ்வத ஸாரஜ்ஞர் கவிசிகா மணி ஸ்ரீ உ. வே. தட்ட V. ஸ்ரீநிவாஸாசாரியரவர்கள் முன்னமே ஸ்ரீ மஹாபாரதத்தில் பல பர்வங்களை மொழிபெயர்த்துக் கொடுத்த பழக்கமுடையவர்களும் எனக்குப் பரம ஆப்தர்களுமாதலால் இந்தப்பர்வத்தில் மேலுள்ள பாகத்தை மொழிபெயர்த்துத் தரும்படி அவர்களை வேண்டினேன். அவர்கள் என் வேண்டுகோளு கிண கிப் பெரு விருப்புடன் ஏற்றுக்கொண்டு அதிவிரைவில் மொழிபெயர்த்து கொடுத்து உதவினார்கள். அவர்களைப் பற்றிப் பீஷ்ம பர்வ முதலியவற்றின் முகவுரைகளில் தெரிவித்துக் கொ டிருக்கிறேன்.

இந்த வன பர்வத்திலட கிய விஷயச் சுருக்கம் ஆதிபர்வத் தொட கத்தில் ஸூசித பாரதமென்னும் பர்வ ஸங்கிரக அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. இந்தப் பர்வத்தின் சிறப்பு அதனால் ந கு விளங்கும். மஹாபாரதத்தின் பதினெட்டுப் பர்வங்களிலும் நூறு சிறு பர்வங்கள் உ டு. அ வைகளுள் இந்த வனபர்வத்தில் மாத்திரம் இருபத்தொரு சிறு பர்வங்கள் அடங்கியுள்ளன. இந்த இருபத்தொரு சிறு பர்வ களின் பெயரையும் முறையையும் இந்தப் பர்வத்தில் அங்க கே கண்டுகொ ார்க நீலகண்டீய வியாக்யான பாடம் முதல் பத்து அத்யாய களை ஆரண்யக பர்வமென்றும் பதினோராவது அத்யாயத்தை கிர்மீரவத பர்வமென்றும் இர ண்டாகக் கொள்கிறது. அதன்படி சிறு பர்வங் ள் இருபத்திரண்டாகும். இந்த முதற் புத்தகத்தில் கிர்மீரவதபர்வம், அர்ஜுநாபிகம பர்வம், கைராதபர்வம் இந்திரலோகாபிகமனபர்வம், நளோபா யா பா ம் தீர்த்தயாத்ராபர்வம் ஆகிய ஆறு சிறு பர்வ ள் இருக்கின்றன. அவைகளில் பல அரிய விஷயங் ள் அட ங்கியுள்ளன. அவற்றில், சூரியஸ்தோத்ரம் யுதிஷ்டிரர் அக்ஷய பாத்திரம் பெறுதல் திரௌபதி யுதிஷ்டிரருக்குச் சொல்லிய பிருகஸ்பதி நீதி வேடனாக வந்த சிவபெருமானுக்கும் அர்ஜுனனுக்கும்

# முகவுரை

ஸம்வாதம் அர்ஜுனன் பாசுபதம் முதலியவற்றைப் பெற்றது அர்ஜுனன் இந்திரலோகம்சென்று வித்தைகளைக் கற்றது நளோபாக்யானம் தீர்த்தங்களின் மகிமை பாண்டவர்களின் தீர்த்தயாத்திரை அகஸ்தியோபாக்யானம் பகீரதன் கங்கை கொணர்ந்தது ரிஷ்யச்ருங்கோபாக்யானம் ஸுகன்யோபாக்யானம் மாந்தாதாவின் சரித்திரம் ஜந்தூபாக்யானம் சேனகபோதோபாக்யானம் அஷ்டாவக்ரோபாக்யானம் யவக்ரீதோபாக்யானம் ஹனுமத்பீமஸம்வாதம் ஸௌகந்திகாஹரணம் முதலியன முக்கியமான வ. தீர்த்தயாத்ராபர்வத்தில் நூறுக்கு அதிகமான தீர்த்தங்களும் புண்யஸ்தானங்களும் கூறப்படுகின்றன.

இந்த மஹாபாரதத்தில் அபிமானமுள்ளவர்களான சில ... க்கவர்களிடத்தில் சிலர் நான் இதனை விரைவில் நடத்திமுடிப்பதில் விருப்பமில்லாதவனாயிருக்கிறேனென்று சொல்லி அவர்கள் மனத்தை வேறுபடுத்தினார்களென்று கேள்வி. அந்தப் பெரியோர்கள் அந்த வார்த்தைகளை நம்பமாட்டார்களானாலும் அவர்களுக்குச் சமாதானம் கூறுவது எனது கடமையாகும். மொழிபெயர்ப்பவர்களுக்கும் அவர்களுடனிருந்து அவர்கள் சொல்லுகிறதை எழுதுகிறவர்களுக்கும் கொடுக்கும் செலவும் ஸஞ்சிகைகளை வெளியிடுதற்குக் காகித விலையும் அச்சுக்கூலியும் எப்பொழுதும் உண்டு. மற்றப் புஸ்தகங்களை வெளியிடுதல் போலல்லாமல் இந்தப் புஸ்தகத்தை வெளியிடுவதற்குப் பல பண்டிதர்களுடைய உதவியும் எழுதுவோர் ஒப்பிடுவோர் முதலிய மற்றும் பலருடைய உதவியும் இன்றியமையாது வேண்டப்படுதலால் அந்தவகையில் மாஸம் ஒன்றுக்கு ரூ. 200-க்குக் குறையாமல் செலவாகிறது. ஒரு ஸஞ்சிகையை இரண்டுமாதத்தில் வெளியிட்டால் காகிதவிலையும் அச்சுக்கூலியும் தவிர ரூ. 400 செலவில் முடிகிறது. 10 மாதங்களில் வெளியிட்டால் ரூ. 2 000 செலவாகிறது. காலதாமதத்தால் எனக்குப் பெரிதும் நஷ்டமேயன்றிச் சிறிதும் லாபமில்லை. அப்படி நஷ்டத்திற்குக் காரணமாகத் தாமதிப்பானேனெனில் மொழிபெயர்ப்பு மூலத்துக்கு ஒத்திருக்கும்படி செய்யவேண்டுமென்னும் விருப்பமே. காலதாமதத்தால் பொருட்செலவு அதிகமாகிறதே என்று தோன்றாமல் எப்படியாவது மொழிபெயர்ப்புத் திருத்தமாக அமையவேண்டுமென்னும் விருப்பமே மேலோங்கி நிற்கிறது. ஒவ்வொரு ஸந்தேகத்தைத் தெளிந்துகொள்வதில் சில சமயங்களில் சில மாதங்களாகிவிடு

கின்றன. இந்த மஹாபாரதத்திலுண்டாகிற ஸந்தேகங்களை எளிதில் விளக்கக்கூடிய பண்டிதர்கள் இக்காலத்துச் சிலரே உள்ளனர். பல பண்டிதர்களுடைய அபிப்பிராயங்களைக் கேட்டுப் பொருள் நிச்சயம் செய்வதில் மிக் காலதாமதம் உண்டாகிறது. உதாரணமாக இந்தப்பர்வத்தில் அஷ்டாவக்ரோபாக்யானத்துக்குப் பொருள் நிச்சயம் செய்வது அதிகஶ்ரமமாயிருந்தது. மொழிபெயர்த்தவர்கள் திரும்பத் திரும்ப மூன்றுமுறை மொழிபெயர்த்தனுப்பினார்கள் வழக்கப்படி மற்றும் சில பண்டிதர்கள் ஒப்புநோக்கினர். பின்னும் சில ஸந்தேகங்கள் இருந்தன. கும்பகோணம், மத்வசாஸ்திர ஸம்பூர்ணர் பாரதவிம்மம், கா. வே. ராமசந்திராசாரியரவர்களிடமும் கேட்டேன். இவருடைய பெருமையை ஆஶ்வமேதிகபர்வம் முகவுரையில் தெரிவித்திருக்கிறேன். இவர்கள் வழக்கம்போல முகமலர்ச்சியுடன் இன்சொற்கூறி அழைத்து ஸந்தேகங்களைக் கேட்டு இனிது விளக்கினார்கள். மஹாபாரதத்தில் மிக்கபரிஶ்ரமமுடையவர்களும் அதனைப் பலமுறை பிரஸங்கம் செய்திருப்பவர்களுமான இவர்களே அஷ்டாவக்ரோபாக்யானத்தில் சில விஷயங்கள் நிச்சயிக்கக்கூடவில்லை என்று சொல்லுவார்களானால் அதன் கடினத்தன்மையைச் சொல்லவும் வேண்டுமோ? அந்த உபாக்யானத்தில் அஷ்டாவக்ரருக்கும் வந்திக்கும் நடந்த வாதமான பதின்மூன்று ஶ்லோகங்களுக்கும் அவற்றின் முன்னும் பின்னுமுள்ள சில சில ஶ்லோகங்களுக்கும் பொருள் நிச்சயம் செய்தற்குச் சில மாதங்களாயின. ஆகியுமென்ன? சில இடங்களில் சொல்லுக்குப் பொருளெழுதப் பட்டிருப்பதைத் தவிர உள்ளுறைப் பொருளான வேதாந்தக் கருத்துக்கள் நன்கு விளக்கக்கூடவில்லை. இப்படியாகச் சில சில இடங்களில் பலபல மாதங்கள் தாமதிக்க நேர்கிறது. காலதாமதமேற்பட்டால் பொருட்செலவு அதிகமாகிறது. அதற்குத் தக்கபடி உதவி கிடைப்பதில்லை. ஆதலின் எனக்கு நஷ்டத்தைத் தருவதான காலதாமதத்தை நானே விரும்பிச் செய்யேனென்பதையும், எடுத்துக்கொண்ட விஷயத்திலுள்ள ஶ்ரமமே அதற்கு முழுதும் காரணமென்பதையும் வருத்தத்துடன் தெரிவிக்கிறேன். பெரியோர்கள் க்ஷமிக்கவேண்டும்.

இவ்வளவு ஶ்ரமங்களிருந்தும் இவ்வளவு தூரம் நடந்திருப்பது கடவுள்கிருபையே. நமது நாட்டில் இப்பொழுது நடந்துவருகிற இதுபோன்ற காரியங்களையும் அவைகள் தொடங்கிய

காலத் தயும் அ வகளுக்கு அ மந்துள்ள ஸௌகரிய ஙளயும் அவைகளில் இதுவ ரயில் நடந்திருக்கிற அளவையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த மஹாபாரதத்தில் இவ்வளவு நட ந்திருப்பதும சிலாகிக் த் தக்கதே

இன்னும் வெளிவரவேண்டி ப பகுதியையும் விரைவில் வெளியிட என்னால் இயன்றவ ர முயல்வேன். அதற்குவேண்டிய உதவிகளையெல்லாம் அமைத்துக் கொடுத்து எல்லாம் வல்ல ஸர்வே ஸ்ரன் இனிது தலைக்கட்டி வ ேவண்டும்.

இந்த மஹாபாரதப் பதிப் ப நான் மேற்கொண ட ால முதல் இந்த அரிய பெரிய நற்காரியத் த மனமுவந்து ஆதரித்து வருகிற பரமோபாரி ளு டய பேருதவிகளையும் பிறவற் றயும் இந்தப்பர்வம் இரண்டாம்பாக மு வுரையில் விவரமா த் தெரிவிப்பேன்.

இந்த மஹாபாரதத் த மிக்கஊக்கத்துடன் படித்துவருகிற பல பெரியோர்கள் வனபர்வத்தை வி ரவில் வெளியிடவே ் டு மென்றும் அதிலுள்ள கதைகளைப் படிப்பதில் தங்களுக்கு விருப்பம் மிகுதியாயிருக்கிறதென்றும் அடிக்கடி கடிதமெழுதி ான் ம த்துக்கு மிக் ஊக்கத்தை அளித்துவருகிறார்கள். வேறு சிலர் வலங்கைமான் ே ாதிஷம் கோவிந்தசெட்டியார் இந்த மஹாபாரத பூர்த்திவிஷயமாக எழுதிக்கொடுத்திருக்கிற 1 ஆரூடத்தின் உ ்மை யத் தெரிந்துகொள்வதில் த ்களுக்குள்ள விருப்பத்தைக் ாட்டி எழுதுகிறார் ள், எப்படியாவது ஸ்ரீ மஹாபாரதம் விரைவில் பூர்த்தியா வேண்டுமென்று விரும்புகிறவர்கள் பலர் இருக்கிறார்களென்பது வெளிப்படுகிறது. அவர்களுடைய விருப்பத்திற்கு இரங்கியாவது ஆஶ்ரிதரக்ஷகனை எம்பெருமான் இதனை விரைவில் நிறைவேற்றியருளவேண்டும்.

மணலூர்,
நரசிங்கன்பேட்டை S.I.R.
1-10-30.

இங்ஙனம்
ம வீ. இராமானுஜாசாரியன்

ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம

# வனபாவம

## விஷய ஸூசிகை

### கிமீவதபாம

## விஷய ஸூசிகை

# விஷய ஸூசிகை

அத்யாயம் பக்கம்



## கைராதபர்வம்.

அத்                ம                                                    க்



தீ த்த தாா பாவ

அ

பக்ம்

அத்  ய  ப°

அத் பக்கம்

அத்யாயம்                                   பக்கம்

அதயயம | பக்
---|---

அ பக்

அ பக்

அத்.        பக்கம்

ஸ்ரீ

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீக்ருஷ்ணதேவாய நாய நம:

# ஸ்ரீ மஹாபாரதம்



# *வனபாவம



## முதலாவது அத்யாயம

கி  ீரவதப  வ



[1]நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம்
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத்

(ப் ள ட  ாகள் சூத ட்டததில ஜயிக் ப்பட்டுத திே  பதியுட
ட்டுக்குப புறபபட்ட  ம  பட்ட  த ஜ
பினதொட  யுதிஷ்டி  அ  கௗ நனே  ழ
கூறித  திருபபிவிட்டு  ஸ்   ாலம
க்க  ே ர்நது அன
றிரவு அஙகே  த  கி  )

ஜனமேஜயர் வினவலானார்: பிராம்மண ஸ்ரேஷ்டரே (கர்ணன்முதலிய) மந்திரிகளுடன் கூடினவர்களும் கெட்ட மன முளளவர்களுமான திருதராஷ்டிரபுத்ரர்களால் இவ்விதம் கபட மாகச் சூதாட்டத்தில் யிக்கப்பட்டவர்களும் மிக்கபகையை உணடு

இதற்கு அரண்ய பர் மென்றும், ஆர '.ய பர் மெ ' றும் ஆர ' ய ர் மெ ' றும் பெயர் ள் ழ ' குகின்றன.

1 இத ' உரை விசேஷத் த ஆதிபர் ம் மு, றப ' ம் குறிப்பி ' ா ' .

பண்ணும் கடுஞ்சொற்களைச் சொல்லக் கேட்டவர்களும் கோப மூட்டப்பட்டவர்களும் குருவம்சத்திலுதித்தவர்களும் என் பிதா வா பரீக்ஷித்தின் பாட்டனார்களுமான பார்த்தர்கள் என்ன செய்தனர்? மிக்க செல்வமுள்ளவர்களும் திடீரென்று துக்கத்தை அடைந்தவர்களும் இந்திரனுக்கு ஒப்பான வல்லமை பொருந்தியவர்களுமான பார்த்தர்கள் வனத்தில் எவ்விதம் சஞ்சரித்தனர்? கடுந்துயரடைந்த அவர்களை எவர்கள் பின்தொடர்ந்தார்கள்? மேன்மைக் குணமுள்ள அவர்களுடைய ஆசாரமென்ன? ஆகாரமென்ன? வாஸம் எங்கே? ப்ராம்மணஶ்ரேஷ்டரே சூரர்களும் புறங்காட்டாத ர்களும் மகாத்மாக்களுமான அவர்களுக்கு வனத்தில் எவ்விதம் பன்னிரண்டுவருஷங்கள் சென்றன? எப்பொழுதும் இனிமையாகப் பேசுந்தன்மையுள்ளவளும் எல்லாஸ்திரீகளுள்ளும் மிகச்சிறந்தவளும் மிக்க மகிமையுள்ளவளும் துக்கத்தை அ டையக்கூடாதவளும் பதிவ்ரதையுமான அந்த ராஜபுத்திரியும் எவ்விதம் பயங்கரமான வனவாஸத் த அடைந்தாள்? தபோதனரே இவை யாவற்றையும் விரிவாக எனக்குச் சொல்லும். பிராம்மணரே உம்மால் சொல்லப்படும் அதிக பராக்ரமமும் சரீரகாந்தியுமுள்ள அவர்களுடைய அ வயனைத்தையும் கேட்க விரும்புகின்றேன். எனக்கோ மிகுந்த ஆவலிருக்கின்றது' என்று கேட்டார்.

வசம்பாயனர் சொல்லலானார்: "(கர்ணன் முதலிய) மந்திரிகளுடன் கூடினவர்களும் கெட்டமனமுள்ளவர்களுமான திருதராஷ்டிரபுத்திரர்களால் இவ்விதம் சூதாட்டத்தில்ஜயிக்கப்பட்டவர்களும் கோபமூட்டப்பட்டவர்களுமான பார்த்தர்கள் ஹஸ்தினாபுரத்திலிருந்து புறப்பட்டார்கள். அப்பொழுது அவர்கள் சஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு திரௌபதியுடன் வர்த்தமானபுரமென்னும் கிராமத்துக்கு நேரேயுள்ள வாயிலால் வெளிப்பட்டு வடக்குமுகமாகச்சென்றார்கள். இந்திரசேனன் முதலிய [1]பதினால்வருக்கதிகமான வேலைக்காரர்கள் எல்லா ஸ்திரீகளையும் அழைத்துக்கொ ண்டு வேகமாகச் செல்லும் தேர்களுடன் இவர்களைப் பின்தொடர்ந்தனர். பாரதரே பிறகு அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் ரதங்களிலேறிச்சென்று கங்கைக்கரையில் ப்ரமாணமென்ற பெயருள்ள பெரிய ஆலமரத்தைப் பார்த்தார்கள். பட்டணத்துஜனங்களோ

[1]'பரிசதுர்தச' எ பது மூலம்; 23- ஆ அத்யாயத் தொட த்தில் 'இந்திரசேனன் முதலிய வேலை ரார் ள் இருபதி மர் எ று கூறியிருத்தலால் இ ே இங்ஙு ரம் பொருள் ொ ள்ளப்பட்டது.

அவர்கள் போகிறதைத்அறிந்துசோகத்தால் மிகவும் பீடிக்கப்பட்ட வர்களாகிப் பீஷ்மரையும் விதுரரையும் துரோண ரயும் கிருபரை யும் அடிக்கடிநிந்தித்துக்கொண்டும்பிரதிஜ்ஞையைச்செய்துகொண் டும் ஒன்றுசேர்ந்து ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள். சகுனியாலும் கர்ணன் துச்சாஸனன் முதலியோர்களாலும் கா கப்பட்ட பாவியான துரியோதனன் இந்த ராஜ்யத்தை நடத்த விரும்புகின்றானாதலால் இந்தக்குலம் முழுதும் இராது; நாமு மிரோம்; நம்முடைய மனைவிகளுமிரார். பாவிகளின் சகாயத்தை அடைந்த இந்தப் பாவியானவன் ராஜ்யத்தை ஆள்விரும்புகின்ற விடத்தில் அவனது குலமும் ஆசாரமும் தர்மமும் அர்த்தமுமிரா. ஸுகம் எங்கிருந்து உண்டாகும்? துரியோதனனே குருவைப் பகை ப்பவன் தர்மத்தை விட்டவன்; பொய்யில் பிரியமுள்ளவன்; பொரு ளில் ஆசைகொண்டவன் கர்வமுள்ளவன் தாழ்ந்த ஸ்வபாவமுள்ள வன் இயற்கையில் தயை அற்றவன் அந்தத் துரியோதனன் ஆளுகின்ற நாடுமுழுவதும் இராது. தயையுள்ளவர்களும் நல்ல ஸ்வ பாவமுள்ளவர்களும் இந்திரியங்களையும் பகைவர்களையும் வென்ற வர்களும் [1]லஜ்ஜையுள்ளவர்களும் கீர்த்தியுடையவர்களும் தர்மா னுஷ்டானத் த முக்கியமாகக்கொண்டவர்களுமான பா டவர் கள் எங்குச் செல்லுகிறார்களோ அங்கு யாவரும் நன்கு செல் வோம் என்றனர். அவர்கள் யாவரும் இவ்விதம் சொல்லி அந் தப்பாண்டவர்களைப் பின்தொடர்ந்தார்கள்; குந்திமாத்ரிகளி புத்திரர்களான அவர்களை அடைந்து கைகளைக் கூப்பிக்கொ டு சொல்லலானார்கள்:

உங்களுக்கு க்ஷேமமுண்டாகுக. துக்கத் தயடைந்தவர் ளான எங்களைவிட்டு எங்கே போகின்றீர்கள்? எங்கு நீங் ள் செல்லுகின்றீர்களோ. அங்கே நாங்களும் வருகிறோம். த் யயில் லாத பகைவர்களால் அதர்மமாக நீங்கள் ஜயிக்கப்பட்டீர்களென்று கேட்டு எல்லாரும் மிக்க கவலை அடைந்திருக்கிறோம். (உங்களுக் குப்) பணிசெய்பவர்களும் அன்புள்ளவர்களும் உபகாரத் த எதிர் பாராது உதவிபுரிகின்றவர்களும் எப்பொழுதும் பிரியத்திலும் நன் மயிலும் ஆ சயுள்ளவர்களுமான எங்களை இங்கு விட்டுவிடு வது தகுதியன்று. கெட்ட அரசனால் ஆளப்பட்ட ராஜ்யத்திலிருந்து எல்லாரும் நாசத் த அடையாமலிருக்க வேண்டுகிறோம். ஆண் ம யிற் சிறந்தவர்களே நல்லவர் கெட்டவர்களின் சேர்க் கயானு

1 லஜ் ஜ ெ ட் ம் ஆதிபர் ம 240- ப ம் குறிப்பிற் ா

டாகும் குணதோஷங்களைச் சொல்லுகிறோம்· கேளுங்கள். 1 புஷ் ப'களின் சேர்க்கையால் வாஸனையானது ஆடை லம் எள்ளு பூமி ஆகிய இ வகளை எவ்விதம் வாஸனை உள்ளனவாகச் செய்ய மோ அவ்விதமே சேர்க்கையாலுண்டாகும் குணங்களும்(செய்யும்) மூடர்களுடன் சேர்க்கையானது அதிக மோகத்திற்கே காரணமன் றோ? ஸாதுக்களின் சேர்க்கையானது ஒவ்வொரு நாளும் தர்மத் திற்குக் காரணம். ஆகையால் நன்கு கற்றுணர்ந்தவர்களும் மூத் தோர்களும் நல்லஸ்வபாவமுள்ளவர்களும் தவம்செய்கிறவர்களும் மனவடக்கத்தையே கைக்கொண்டவர்களுமான ஸாதுக்களுடன் ஸஹவாஸம் செய்யவேண்டும். கல்வி குடிப்பிறப்பு செய்கை (ஆகிய இம்) மூன்றும் எவர்களுக்குச் சுத்தமாயிருக்கின்றனவோ அவர்கள் அடுக்கத் தகுந்தவர்கள். அவர்களுடன் சேர்க்கை யானது சாஸ்திரங்களைக்காட்டிலும் மேலானதன்றோ? நாம் இங்கே (அக்நிஹோத்ர முதலிய) கர்மாவைச் செய்யாவிடி னும் புண்ணியசீலர்களான ஸாதுக்களிடத்தில் (சேர்வதால்) புண்ணியத்தையும் பாவிகளுடன் சேர்வதால் பாவத்தையுமே அடைவோம். துஷ்டர்களுடைய பார்வையாலும் தொடுகை யாலும் பேச்சினுலும் உடன் உட்காருவதாலும் தர்மானுஷ் டானங்கள் குறைந்துவிடும். (நீசர்களுடன் சேர்வதனுல்) மனிதர் கள் சித்தசுத்தியையும் அ டயமாட்டார்கள். மனிதர்களுக்குப் புத்தியும குறைந்துவிடுகிறது· நடுத்தரமானவர்களுடன் சேர்ந்தால் (அது) மத்திமத்தன்மையை அடைகிறது. மேலோர்களுடன் சேர்ந்தவர்கள் மேன்மையை அடைகிறார்கள். சிறந்தவர்களா லும் பரிசிதர்களாலும் மஹா தர்மிஷ்டர்களாலும் உலகத்தில் விசேஷமாகச் சொல்லப்பட்டவைகளும் தர்மார்த்தகாம' ளுக்குக் காரணங்களும் னங்களின் ஆசாரத்தில் ஏற்பட்டவை களும் வேதத்தில் சொல்லப்பட்டவைகளும் சிஷ்டர்களால் அ'கி ரிக்கப்பட்டவை களுமான நற்குணங்கள் இங்கே இப்பொழுது உ'களிடத்தில் தனித்தனியும் சேர்ந்தும் (காணப்படுகின்றன). ந மை ய·விரும்பும் நாங்கள் குணவான்களின்மத்தியில் வஸிக் விரும்புகின்றோம் என்றார்கள்.

தர்மபுத்திரர் பிராம்மணர்கள் முதலியவர்கள் அன்பு த ய இ ளால் கட்டப்பட்டு எ'களிடத்திலில்லாத குணங்களையும் சொல்லுதலால் நாங்கள் பாக்ய ான் ளானோம். ஆ...கயால் நா'

1 இரண்டு சொற்'' விடப்பட்டன

ம்பிமார்களுடன் உங்கள் யாவருக்கும் தெரிவித்துக்கொள்ளு ிறேன். எம்மிடத்தில் அன்பினுலும் அருளாலும் அதனை வேறுவித மாகச் செய்யக்கூடாது. அஸ்தினுபுரத்தில் பாட்டனுரான பீஷ் மரும் திருதராஷ்டிரரும் விதுரரும் என்தாயாரும் எங்களுடைய அனேகம் ஸ்நேகிதர்களும் (இருக்கிருர்கள்). துக்கத்திலுைம் மன வருத்தத்திலுைம் கலங்கினவர்களும் (எமக்கு வேண்டிய) நன்மை யைச் செய்பவர்களுமான அவர்களெல்லாரும் நாங்கள் நன்மை அடைவதில் (உங்களுக்கு) விருப்பமிருந்தால் உங்களாலே நல்ல முயற்சியுடன் காப்பாற்றப்படத்தக்கவர்கள். என் ரவை விரும்பி நெடுந்தூரம் வந்துவிட்டீர்கள். திரும்புங்கள். அடைக்கலம்போ லான என் பந்துக்கள் விஷயத்தில் மனத்தில் அன்புபாராட்ட ேவண்டும். இதுவே (செய்யவேண்டிய) காரியங்களுள் சிறந்ததாக என் மனத்திலிருக்கின்றது. அதனுலே எனக்கு மரியாதையும் சந் தோஷமும் செய்யப்பட்டனவாகும் என்ருர். அந்தத் தர்மபுத்திர ரால் அவ்விதம் வேண்டப்பட்ட அந்த ஜனங்கள் துக்கத் த அடைந்து அரசரே 'என்று பயங்கரமான தீனஸ்வரத்துடன் அழு தார்கள். பிறகு தர்மபுத்திரருடைய குணங்களைநினைத்துத் துக்கத் தால் பீடிக்கப்பட்டவர்களும் மிக்க விருப்பம்கொண்டவர்களுமான (ஜனங்கள்) தங்களிஷ்டம் நிறைவேருதவர்களாகிப் பாண்டவர் ளிடத்தில் விடைபெற்றுக்கொ ' டு திரும்பினுர்கள். பா 'டவர்க ளோ பட்டணத்து ஜனங்கள் திரும்பினவுடன் தேர்களிலேறிக் கொண்டு அந்தஸாயங்காலத்தில் கங்கைக்கரையிலிருக்கும் ப்ரமாண மென்னும் பெரிய ஆலமரத் த அடைந்தார்கள். வீரர்களான அந் தப் பாண்டவர்கள் பிற்பகலில் அவ்வாலமரத்தை அடைந்து சுத்த மான ஜலத்தில் ஸ்நானம் செய்து அந்தராத்திரி (முழுவதும் அங்கே) வாஸம் செய்தார்கள். துக்கத்தால் இளைத்த அவர்கள் அந்த ராத்திரியை ஜல பானத்தாலேயே போக்கினுர்கள். அந்த ஜனங்களுள் பத்னிகளுடன்கூடினவர்களும் சிஷ்யக்கூட்டங் களுடனும் பந்துக்களுடனும் கூடினவர்களும் [1] ஸ்நாதகப் பிரம்ம சாரிகளுமான பிராம்மணர்கள் சிலர் இவர்களைச் சிநேகத் தால் பின்தொடர்ந்தார்கள். வேதபாராயணம் பண்ணும் ஸ் பா வமுள்ள அந்த அந்தணர்களால் சூழப்பட்ட அந்த அரசரான வர் பிரகாசித்தார். ரம்மியமாயும் [3] பயங்கரமாயுமிருக்கிற

1 ஸபாபர் ம் 72 ம் ப ' ம் குறிப்பிற் ாண்
தாபமில்லா யாலும் சந்தியா ாலத்தின் சி ப்பாலு ' ரம்மிய '
3 ராக்ஷ ர் ' பிசாச ' ளி ' ஞ்சாரத்தா ' ப ' ரம்

1 முகூர்த்தத்தில் பிரகாசப்படுத்தப்பட்ட அக்னியுள்ள அந்தப் பிராமணர்களின் வேதபாராயணத்தை முன்னிட்ட ஸம்பாஷணை யானது உண்டாயிற்று. ஹம்ஸத்தினுடையதுபோல மதுரமான கண்டத்வனியுடன் கூடின அவ்வந்தண ஶ்ரேஷ்டர்களும் குரு ஶ்ரேஷ்டரான அரசரைச் சமாதானம் செய்துகொண்டு ராத்திரி முழுதையும் போக்கினார்கள். அரசரே துக்கசோகங்களுடன் கூடின தர்மபுத்திரரோ தம்பிமார்களுடனும் எல்லாச்சிநேகிதக் கூட்டங்களுடனும் அந்த இரவுமுழுதும் படுத்திருந்தார்.

## இரண்டாவது அத்யாயம.

## கி ீரவதபர்வம் (தொடர்ச்சி)

(யுதிஷ்டி ா உட வா தபிரா ன ளைக் ாக் முடி ா யச
சோலலித திருமபுமபடி ே ன டி ர ம அவாகள தம் த
த ே ே ஷித்துக்கோன டு உடன விருமபி தும்
யுதிஷ்டி ° நநத சே ர த ததால ஸிததி
பெற அநதன ப போஷிக்கு படி
சோலலி )

பொழுது புலர்ந்தவுடன் (சாஸ்திரத்தில் சொல்லிய) கட ம க்கே வருத்தமின்றிச் செய்கின்ற ர்களும் காட்டைக் குறித்துச் செல்ல விருப்பமுள்ளவர்களுமான அவர்களுக்குப் பிக்ஷையெடுத்து உண்பவர்களான ப்ராம்மணர்கள் முன்னே நின்றார்கள். பிறகு குந்தியின் புத்திரரும் அரசருமான யுதிஷ்டிரர் அவர்களைப் பார்த்துச் சொல்லலானார்: நாங்களோ செல்வமனைத்தையும் ராஜ்யத் தயும் ஒளி யயும் இழந்து பழம் கிழங்கு மாமிசம் இவைகளை ஆ ாரம் செய்துகொண்டு துக்கத்தையடைந்து காட்டைக் குறித்துச் செல்லுகின்றோம். காடோ அதிக தோஷத்துடன் கூடியது துஷ்ட மிருகங்களும் பாம்பு ளும் மிகுதியாக உள்ளது. அவ்விடத்தில் உ ளுக்குத் துக்கமும் நிச்சயம் உண்டாகுமென்று நினைக்கிறேன். பிராம்ம ர்களுக்குத் துன்பம் உண்டாக்கினால் அது தே த ளையும் நாசமா குமென்றால் என்னைப்பற்றிச் சொல்லவும் வே டுமோ? பிராம்ம ர் ளே உ களிஷ்டப்படி இ கிருந்து திரும்பிவிடு கள் என்றார்.

பிராம்மணர்கள் ஓ அரசரே உங்களுக்குள்ள கதி எதுவோ அதனை நாங்களும் அ டைய விரும்பியவர்களாயிருக்கிறோம். நல்ல தர்மத்தை அறிந்தவர்களும் உங்களிடத்தில் பற்றுள்ளவர்களுமான எங்களை விடுவது நியாயமன்று. தேவர்களும் பக்தர்கள்விஷயத்தி லனேக் காரியத்தைச் செய்கின்றனர். நல்ல ஆசாரத் தயு டையவர்களான பிராம்ம ர்கள்விஷயத்திலோ அதிகம் செய்கின்றனர்' என்றார்கள். தர்மபுத்திரர் பிராம்மணர்களே என ்கும் பிராம்மணர்களிடத்தில் மேலானபக்தி எப்போதும் உண்டு. இப்போதுள்ள ஸஹாயத்தின் குறைவோ என்னைக் கஷ்டப்படுத்துகின்றது. கனி கிழங்குகளையும் மிரு ங்களையும் கொண்டு ருகிற அந்த என்னுடைய எல்லாத் தம்பிகளும் சோகத்தாலுண்டான துக்கத்தால் மிகவும் மயக்கத் த அடைந்திருக்கின்றார்கள். திரௌபதிக்கு நேர்ந்த துன்பத்தாலும் ரா ்யம் கவரப்பட்டதாலுமுண்டான துக்கத்தால் பீடிக்கப்பட்ட இவர்களை இப்போது நான் துன்பப்படுத்துதற்குத் துணியவில்லை என்றார்

ப்ராம்மணர்கள் ஓ அரசரே எம்மைக்காப்பாற்றும் விஷயமான கவலையானது உமது மனத்தில் உண்டாகவேண்டாம். நா ்களே காட்டிலுள்ளவைகளைச் சம்பாதித்துக்கொண்டு உம்மைத் தொடர்ந்து வருகிறோம். உங்களுக்கு க்ஷேமத் தத் தியானம் செய்வதாலும் (ம ்களார்த்தமான) மந்திர பத்தைச் செய் தாலும் உமக்கு மங்களத்தைச் செய்வோம். அனுகூலமான க த களைச் சொல்லிக்கொண்டு காட்டில் கூடவே சந்தோஷமாக வஸிக்கின்றோம்' என்றார்கள். தர்மபுத்திரர் இது இவ்விதமே ஆகுக; சந்தேகமில்லை. நானும் ப்ராம்மணர்களுடன் மகிழ்வேன். ஆனால் செல்வக்குறைவால் (இதனை) எனக்குக் குறைவுபோல நினைக்கிறேன். (துக்கத் த) அடையத்தகாதவர்களும் என்னிடத்தில் சினேகத்தால் கஷ்டப்படுகிறவர்களுமான நீங்களனைவரும் தா ்களே சம்பாதித்துச் சாப்பிடுகிற த எப்படிப் பார்ப்பேன்? பாவிகளான திருதராஷ்டிரபுத்திரர்களை நிந்திக்கவேண்டும் என்றார். அரசர் இவ்விதம் சொல்லித் துக்கித்துக்கொண்டு தரையில் உட் ார்ந்தார். வேதாந்த சாஸ்திரத்தில் பயிற்சியுள்ளவரும் யோகத்திலும் ஸாங்கியத்திலும் ஸமர்த்தரும் சௌனகரென்று பிரசித்தி பெற்றவரும் வித்துவானுமான ப்ராம்மணர் அந்த அரச ரப் பார்த்துப் பின்வருமாறு சொல்லத் தொடங்கினர்:

ஒவ்வொருநாளும் ஆயிரம் சோககாரணங்களும் நூறு ஸந்தோஷ காரண்களும் மூடனை அடையும்; பண்டிதனை அடைதில்லை. அனேக தோஷங்களுள்ளவையும் ஞானத்திற்கு விரோதமானவையும் நன்மையைக் கெடுக்கக்கூடியவையுமான செய் க ளில் உம் மப்போன்ற புத்திமான்கள் ஸம்பந்தப்படமாட்டார்கள். அரசரே எல்லாக் குற்றங்களையும் போக்கக்கூடியதும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளுக்கு நன்குஒத்ததும் எட்டு அங்கங்களுடன் கூடியதுமாக எந்தப்புத்தியைச் சொல்லுகிறார்களோ அந்தப்புத்தியானது உம்மிடத்தில் இருக்கிறது. கேட்கவிருப்பம் கேட்டல் கிரஹித்தல் தரித்தல் ஊகித்தல் தோஷத்தை விலக்குதல் அர்த்தத் த நன்கு அறிதல் உண்மையறிதல் ஆகிய இவையே புத்தியின் குணங்கள். தனநாசங்களிலும் தாண்டமுடியாத சாரீர துக்க களிலும் (ஸ்த்ரீயை இழுத்தல் முதலிய) தன்ஜனங்களிடத்திலுண்டான ஆபத்துக்களிலு முண்டாகும் சரீரம் மனம் இவைகளுக்குண்டான துக்கங்களினால் உம்மைப்போன்றவர்கள் வருத்தத்தை அடையமாட்டார்கள். முன்காலத்தில் மஹாத்மாவான னகரால் சொல்லப்பட்ட மனவுறுதிக்குக் காரணமான சுலோகங்களைச் சொல்லுகிறேன்; கேளும். (அவற்றின் பொருள்: ) ஜகத்தானது மனத்தாலும் தேகத்தாலுமுண்டான துக்கங்களால் பீடிக்ப்பட்டுள்ளது. அந்தத்துக்கங்களைக் குறைக்கத்தக்க உபாயமான இதனைச் சுருக்கமாயும் விஸ்தாரமாயும் சொல்லுகிறேன். கேளும். வியாதி முள் முதலியவை தைத்தல் அலைதல் வேண்டிய பதார்த்தங்களை விட்டுவிடுதலாகிய இந் நான்கு காரணங்களால் சாரீரமான துக்கம் ண்டாகிறது. அப்பொழுது மருந்துமுதலிய கிரியாபலத்தால் வியாதியின் சமனமும் அதை எப்போதும் நினையாமலிருத்தலாகிய யோகபலத்தால் ஆதியென்கிற மனோதுக்கத்தின் சமனமும் உண்டாகும். [1]அறிஞர்கள் ஶ்ரமப்பட்டு இன்சொற்களாலும் மனத்துக்கு இனியவற்றைக் கொடுத்தலாலும் மனிதர்களின் மனோவ்யாதி ய முதலில் அடக்குகிறார்கள். காய்ச்சின இரும்புக்கட்டி (யைத் தோயப்ப)தால் குடத்திலுள்ள நீர் வெப்பத்தை அடைவதுபோல மனோதுக்கத்தால் சரீரம் மிக்க வெப்பத்தை அடைகிறது. ஆனது பற்றி லத்தால் நெருப்பை அவிப்பதுபோல ஞானத்தால் மனோதுக்கத்தை விலக்கவேண்டும். மனத்திலுள்ள துக்கம் நீங்கினால்

1 'மதிமந்தः எ ' ப ' மூலம்; 'புத்திமான் ளான த்யர் ' எ ' இ 'கிலீஷ் மொழி பெயர்ப்பு.

மெய்யின் துக்கம் தணிதலையடையும். மனோதுக்கத்திற்கு மூலம் ஆசையென்று அறியப்படுகின்றது. ப்ராணியானது பற்றினால் (கர்மாவில்) செல்லுகிறது · துக்கத்தின் சேர்க்கையையும் அடைகிறது. பற்றுதலாலேயே துக்கம் பயம் சோகம் மனக்களிப்பு துன்பம் ஆகிய எல்லாம் உண்டாகின்றன. எல்லாம் பற்றினாலேயே உண்டாகின்றன. பற்றினால் கருணையும் அன்பும் னங்களிடத்தில் அஸூயை பமுதலியவையும் உண்டாகின்றன. (ஸ்நேகம் அனுராகம்) இவ்விரண்டும் கெடுதலை விளைவிப்பவை. அவற்றுள் முதலாவதான ஸ்நேஹமானது வலிதென்று எண்ணப்பட்டிருக்கிறது. பொந்திலுள்ள நெருப்பானது எப்படி மரத்தை வேருடன் மிச்சமில்லாமல் எரிக்கின்றதோ அப்படியே ஆசையாகிற தோஷம் சிறிதானாலும் தர்மத்தில் விருப்பமுள்ளவனைக் கெடுத்துவிடும். விஷயங்களில்லாதபோது தியாகி யெனப்படமாட்டான். (விஷயங்கள்) வரும்போது (அவற்றில்) தோஷத்தைப் பார்ப்பவனே (தியாகி யெனப்படுவான்). அந்தமனிதனே வராக்கியத்தை அடைகிறான்; வைரமில்லாதவனும் (துவேஷமில்லாததால்) [1] பிரதிபந்தங்களற்றவனுமாகிறான். ஆகையால், உறவினர் நண்பர் பொருள் இவற்றிலிருந்து பற்றுதலை விலக்கவேண்டும். தன் உடம்பிலுள்ள அபிமானத்தையும் அறிவால் விலக்கவேண்டும். (நித்தியாநித்திய) ஜ்ஞானமுள்ளவர்களும் (நித்திய வஸ்துவை அ டைவதற்கு) முயற்சி செய்பவர்களும் சாஸ்திரத்தை அறிந்தவர்களும் சீர்ப்படுத்திய மனமுள்ளவர்களுமான அந்தப் (பெரியவர்களிடத்தில்) தாமரையிலைகளில் ஜலம்போல ஆசை பற்றாது. [2]ராகத்தால் பற்றப்பட்ட மனிதன் [3]காமத்தால் இழுக்கப்படுகிறான். அவனுக்கு [4]இச்சைஉண்டாகிறது. பிறகு [5]த்ருஷ்ணை விருத்தியடைகிறது. த்ருஷ்ணையோ ஸகலபாபத்திற்கும் காரணம்; மனிதர்களுக்கு எப்பொழுதும் சஞ்சலத்தை உண்டுபண்ணக்கூடியது · அதர்மம் நிறைந்தது; பயங்கரமானது; பாவத்தை உண்டுபண்ணக் கூடியது. எந்தத் திருஷ்ணையானது கெட்ட புத்தியுள்ளவர்களால் விடமுடியாததோ (மனிதன்) ஜரையை யடைந்தாலும் எது ஜரை ய அ ட

1 ே றுபாடம். 2 அழகிய வஸ்து ப் பார் கும்போது மனத்திற்கு உண்டாகும் மலர்ச்சி, ரா ம். 3அதை அடையவே ண்டுமெ ன்ற விருப்பம் ாமம். 4கி டத்த பிறகு திரும்பவும் அ டய விரும்பு து, இச் ச 5அடிக் டி கி டத்தாலும் திருப்தியின்மை, த்ருஷ்ணை எனப்படும்

யாததோ எது ப்ராணனை அபகரிக்கக்கூடிய ரோகமோ அந்தத் திருஷ்ணையை விட்டவனுக்கே ஸுகம் உண்டாகும். ஆதியும் அந்தமுமில்லாத அந்தத் திருஷ்ணையோ மனிதர்களின் மனத்தி லிருந்துகொண்டு இரும்பை அதனிடத்துள்ள தீ அழிப்பதுபோலப் பிராணிகளை நாசம் செய்கிறது. தன்னிடத்திலுண்டான நெருப் பினால் விறகு எவ்விதம் நாசத்தைஅடைகின்றதோ அது போல மனத்தை அடக்காதவன் உடன்பிறந்த லோபத்தால் நாசமடைகின்றான். அரசன் லம் நெருப்பு திருடன் உறவி னன் யாசகன் காலன் ஆகிய இவர்களிடமிருந்து பணமுள்ளவர் களுக்கு எப்பொழுதும் பயமுண்டு. பிராணிகளுக்கு யமனிடம் எப் பொழுதும் பயமிருப்பதுபோலப் பணமுள்ளவர்களுக்கு எப்பொ ழுதும் பயமுண்டு. எவ்விதம் ஆகாசத்தில் பக்ஷிகளாலும் பூமி யில் துஷ்டமிருகங்களாலும் ஜலத்தில் மீன்களாலும் மாம்ஸம் உண்ணப்படுமோ அவ்விதம் (எவ்விடத்திலும்) யாவராலும் பண முள்ளவன் உண்ணப்படுகிறான். சில மனிதர்களுக்குப் பணமே அனர்த்தமாகிறது. பணத்தால் செய்யக்கூடிய [1] ஜ்யோதிஷ்டோ மத்தில் விருப்பமுள்ள மனிதன் மோக்ஷத்தை அடையமாட்டான். ஆகையால் அர்த்தப்ராப்திகள் யாவும் மனத்திற்கு விசேஷமாக மயக்கத்தை விருத்திசெய்யக்கூடியவை. கார்ப்பண்ணியம் கொழுப்பு அகங்காரம் பயம் மனக்கலக்கம் முதலிய இந்தத் துக்கங்கள் மனிதர்களுக்குப் பொருளால் உண்டாகின்றனவென்று புத்திமான்கள் அறிகிறார்கள். பொருளைத்தேடுவதிலும் துக்கமே; சம்பாதித்ததின் ரக்ஷணத்திலும் துக்கமே; நாசத்திலும் துக்கமே; செலவிலும் துக்கம். பொருள்நிமித்தமாகவே கொலையும் செய்கி றார்கள். பொருள்களை விடுவதும் துக்கமே. காப்பாற்றப்பட்டா லும் அவை சத்துருக்களாகின்றன. துக்கத்தாலேயே அடையப் படுகின்றன அவற்றின் நாசத்தைச் சிந்திக்கக்கூடாது. மூடர் கள் திருப்தியற்றவர்கள். பண்டிதர்கள் சந்தோஷத்தை அடைகி றார்கள். ஆசைக்கு முடிவில்லை. ஸந்தோஷம் மேலான ஸுகம். ஆகையால் இவ்வுலகில் பண்டிதர்கள் சந்தோஷத்தையே மேலான தாக எண்ணுகிறார்கள். யௌவனம் ரூபம், ஜீவனோபாயம், ரத் தினக்குவியல் ஐச்வரியம்,இஷ்டவஸ்துவினுடைய சேர்க்கை ஆகிய யாவும் அநித்தியம். பண்டிதன் அவற்றில் ஆசைவைக்கக்கூடாது.

[1] ஜ்யோதிஷ்டோமம் முதலிய ர்மத்தினால் மாத்திரம் மோக்ஷம் கி ட ' ாது ' எ ' பது ருத்து.

ஆகையால் அர்த்தங்களை விடவேண்டும். கிலேசங்களையும் சகித்துக்கொள்ளவேண்டும். பணமுள்ளஒருவனும் கஷ்டமில்லாதவனுகக் காணப்படவில்லையல்லவா? ஆனதுபற்றியே தார்மிகர்களான புருஷர்களால் விரும்பாமற்கிடைத்த அர்த்தம் புகழப்படுகின்றது. தர்மத்துக்குவேண்டி எவனுக்குப் பொருளில் விருப்பமிருக்கின்றதோ அவனுக்கு ஆசையில்லாம மேலானது. சேற்றைப்(பூசி) அலம்புவதைக் காட்டிலும் தொடாமலிருப்பது மனிதர்களுக்கு மேலானதன்றோ? ஓ யுதிஷ்டிரரே ஆகையால் செல்வத்தை நீர் பற்றவேண்டாம். தர்மத்தினுல் உமக்குச் செய்யத்தக்கது இருக்குமானுல் அர்த்தத்தில் இச்சையை விட்டவராகிவிடும்?' என்ருர்.

யுதிஷ்டிரர் ஓ பிராம்மணரே விஷயானுபவத்தில் ஆசைகொண்டு பொருளை அடையவேண்டுமென்ற இந்த எண்ணம் எனக்கு இல்லை. ஆனுல், பிராம்மணர்களைப் போஷிக்கவேண்டி ஆசைப்படுகின்றேன். லோபத்தால் அன்று. ஓ பிராம்மணரே கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கிற நம்போன்றவன் பின்தொடர்ந்து வருபவர்களைப் போஷிப்பதையும் காப்பாற்றுதலையும் எப்படிச் செய்யாமலிருப்பன்? 1 (பஞ்சமஹாயஜ்ஞங்களில்) எல்லாப் பிராணிகளுக்குமே பாகம் காணப்படுகின்றது. சமையல் செய்யாதவர்களா ஸந்யாஸிமுதலானவர்களுக்கும் அப்படியே கிருஹஸ்தன் கொடுக்கவேண்டும். தர்ப்பாஸனங்கள் இடம், தீர்த்தம், நாலாவதான ஸத்யமும் பிரியமுமான வார்த்தை ஆகிய இவைகள் ஸாதுக்களின் வீடுகளில் ஒருபோதும் அற்றுப்போகா, நிற்றலால் களைத்தவனுக்கு ஆஸனமும் தாகமுள்ளவனுக்கு உண்ணீரும் பசியுள்ளவனுக்குப் போஜனமும் கொடுக்கவேண்டும். கண்ணுல் பார்க்கவேண்டும். மனத்தில் நினைக்கவேண்டும்; ப்ரியமான வார்த்தையைச் சொல்லவேண்டும். எழுந்து ஆஸனம் கொடுக்கவேண்டும். இதுவே நெடுநாள்வரையுள்ள தர்மம். எழுந்து பின்தொடர்தலையும் நியாயமாகப் பூஜையும் செய்யவேண்டும். அக்நிஹோத்திரமும் காளைமாடும் ஞாதிகளும் அதிதிகளும் உறவினர்களும் மக்களும் பத்னிகளும் வேலைக்காரர்களும் பூஜிக்கப்படாவிட்டால் எரித்துவிடுகிறார்கள். தனக்காக அன்னத்தைச் சமைப்பது கூடாது (யாகம் முதலிய) காரணமில்லாமல் பசுவைக் கொல்லக்கூடாது.

1 ஆதிபர்வம் 559-ம் பக்கம் குறிப்பைப் பார்க்க.

தான் ஒருவனுகச் சாப்பிடவும்கூடாது. விதிக்கு விலக்காகக் கொடுத்தல் கூடாது. ச்வாக்களுக்கும், ச்வபசர்களுக்கும் பக்ஷிகளுக்கும் பூமியில் (அன்னத்தை) வைக்கவேண்டும். இவ்விதம் மாலையிலும் காலையிலும் கொடுக்கப்படுவது வைச்வதேவமென்று பிரஸித்தமானதன்றே? ஆகையால் எப்பொழுதும் விகஸத்தைச் சாப்பிடுகிறவனுகவும் அமிருதத்தைச் சாப்பிடுகிறவனுகவும் இருக்கவேண்டும். அதிதிகள் புஜித்து மிஞ்சினதை விகஸமென்றும் யஜ்ஞம் பண்ணி மிஞ்சினதை அம்ருதமென்றும் (சொல்லுவதுண்டு). கண்ணுல் பார்க்கவேண்டும்' மனத்தில் நினைக்கவேண்டும்' உண்மையும் பிரியமுமான வார்த்தை பேசவேண்டும்' பின் தொடர்ந்து வரவேண்டும்' அவர்களுக்கு வேண்டியவற்றைச் செய்யவேண்டும். இது ஐந்து தக்ஷிணையுள்ள யஜ்ஞமாகிறது. வழியில் நடக்கிறவனும் சிரமத்தையடைந்தவனும் முன்பார்க்கப்படாதவனுமானவனுக்கு மனக்களிப்புடன் அன்னத்தைக் கொடுக்கிறவனுக்குப் புண்ணியமாகிற பலன் அதிகம் உண்டாகிறது. ஓ. பிராம்மணரே கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கிற எவன் இவ்விதம் செய்து வருகின்றுனே அவனுடைய தர்மத்தை மேலானதாகச் சொல்லுகிறுர்கள். நீர் எப்படி எண்ணுகிறீர்?' என்றுர்.

சௌனகர் சொல்லுகிறுர். 'ஆ ஆ பெரியகஷ்டம் இவ்வுலகம் விபரீதமாக இருக்கிறது. ஸாதுவானவன் எதனுல் லஜ்ஜை அடைகிறுனே அதனுல் துஷ்டன் ஸந்தோஷமடைகிறுன். அறிவில்லாதவன் மோகம் ராகம் ஆசை இவைகளால் மூடப்பட்டு விஷயங்களுக்குட்பட்டுப் [2] போகத்திற்கும் உதரத்திற்குமாக யாகசேஷத்தை மேலானதாக நினைக்கிறுன். மனிதன் அறிவுள்ளவனுயிருந்தாலும் (விஷயங்களில்) இழுக்குந் தன்மையுள்ள இந்திரியங்களால் அறிவற்ற ஸாரதியானவன் திசைமயக்க கொண்ட துஷ்டக் குதிரைகளால் இழுக்கப்படுவதுபோல இழுக்கப்படுகிறுன். எப்பொழுது (மனம்சேர்ந்த) ஆறு இந்திரியங்களும் விஷயத்தில் செல்லுகின்றனவோ அப்பொழுது இந்த ஜனங்களுடைய மனமானது மூந்திய ஸம்ஸ்காரத்துக்குத் தக்கபடி (விஷயத்தில் செல்லு கிறது. எந்த மனிதனுடைய மனமானது இங்கு இந்திரியத்தின் விஷயங்களை அனுபவிக்கச் செல்லுகிறதோ அவனுக்கு ஆவலுண்

[1] அனுசாஸன பர்வம் 535 ம் பக் ம் குறிப்பில் ாண்

[2] தேவலோ ம்சென்று போகமுதலியவற் ற அனுபவி லாெ பது ருத்து,

டாகிறது · பிரவிருத்தியுமுண்டாகிறது. பிறகு ச ' கல்பத்தைக் காரணமாகவுடைய காமத்தால் விஷயங்களாகிற பாணங்களால் அடிக்கப்பட்டு விட்டிற்பூச்சி நெருப்பில் (பழம் என்னும்) ஆ ச யால் விழுவதுபோல லோபமாகிற நெருப்பில் விழுகிறான். பிறகு மனைவிகளாலும் இஷ்டப்படி விளையாட்டினாலும் மோஹத்தை அடைந்து அஞ்ஞானத்தில் முழுகி ஆத்மாவை அறிகிறதில்லை. இவ் விதமாகவே ஸம்ஸாரத்தில் சக்கரம்போல் அஜ்ஞானம் கர்மம், காமம் ஆகிய இவைகளால் சுற்றும்படி செய்யப்பட்டவனாகிப் பிறவி களில் விழுகிறான். நீரிலோ நிலத்திலோ ஆகாசத்திலோ அடிக்கடி பிறவியை அடைந்து பிரம்மாமுதல் துரும்புவரையிலுமுள்ள பிரா ணிகளில் சுற்றிக்கொண்டிருக்கிறான். இது அஜ்ஞானிகளின்வழி. (மோக்ஷத்தில் விருப்பமுற்று அதற்குரிய சிறந்த தர்மத்தில் ஆசை யுள்ள) ஞானிகளின் வழியையும் சொல்லுகிறேன் · கேள். கர்மா வைச்செய் என்றும், அதன் (பலனை) விட்டுவிடு' என்றும் வேதவாக் கியம் இருக்கின்றது. ஆகையால் அபிமானத்துடன் இந்தத் தர்மங் களை யெல்லாம் செய்தல் கூடாது. யாகம் அத்தியயனம் தானம் தவம், ஸத்தியம் பொறு ம ஐம்பொறியடக்கல் ஆ சயின்மை யென்கிற இந்த எட்டுவித மார்க்கங்கள் தர்மத்திற்குச் சொல்லப் பட்டிருக்கின்றன. இவற்றுள் முன்சொல்லிய நான்கும் [1] பிதிரு யானமார்க்கத்திற்குக் காரணமான வ. அவசியம் செய்யவேண் டிய எந்தக் கர்மா வயும் அபிமானத்துடன் செய்யக்கூடாது. பின் சொல்லிய நான்கும் தேவயான மார்க்கம். இவை எப் பொழுதும் ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்பட்ட வ. (இவற் றப்) பின்வரும் எட்டு அங்கமுள்ள மார்க்கத்தால் சித்தசுத்தியை அடைந்தவனே அனுஷ்டிக்கவேண்டும். நன்கு ஸங்கல்பத் த அடக் குவதாலும் நன்கு இந்திரியத்தை அடக்குவதாலும் நன்கு (எல் லாத்தேசங்களிலும் எல்லாச்சமயங்களிலும் எவ்வ கயாலும் செய் யப்படும் அஹிம்ஸை முதலிய) விரத விசேஷங்களினாலும் நன்கு குருபணிவிடைசெய்வதனாலும் நல்ல ஆகாரத்தை உடகொள்ளுவத னாலும் நன்கு வேதாத்யயனம் செய்வதனாலும் நன்கு கர்மாவின் ஸன்யாஸத்தாலும் நன்கு சித்தத்தைஅடக்குதலாலும் னன மரணத்தை யிக்கவேண்டுமென்று எண்ணமுள்ளவர்கள் இவ் விதம் கர்மாக்களைச் செய்கின்றார்கள். விருப்பு வெறுப்பு அற்

[1] பிதிருலோ ம் செல்லும் வழி குப் பிதிருயா மார் ' ' று பெ ர்

றவர்களும் ஐஸ்வரியத்தை அடைந்தவர்களுமான ருத்திரர்களும் ஸாத்தியர்களும் ஆதித்யர்களும் அஸ்வினீதேவதைகளும் யோகைஸ்வர்யத்தோடு கூடினவர்களாக இந்தப்பிரஜைகளைக் காப்பாற்றுகின்றார்கள். ஓ பாரதரே குந்திபுத்திரரே நீரும் அதுபோலப் பூர்ணமான மனவடக்கத்தைஅடைந்து தவத்தினால் (அஷ்டாங் ) யோகத்தின்ஸித்தி ய அடையும். மாதாபிதாக்களால் வரக்கூடியதும் கர்மாவால் வரக்கூடியதுமான ஸித்தியோ உமக்கு உண்டாயிருக்கிறது. தேவதையின் தியானத்தால் ப்ராம்மணர்களைக் காப்பாற்றுவதற்காக ஸித்தியை அ டயும். ஸித்தர்கள் எதை எதை விரும்புகின்றார்களோ அ த அதைத் [1]தவத்தின்மஹிமையால் செய்கிறார்கள். ஆகையால் தேவதாத்தியானத்தைச் செய்து உம்இஷ்டத்தை நிறைவேற்றும் என்றார்.

## மூன்றாவது அத்யாய

## கி ரீரவதபாவம (தோடாசசி )

(யுதிஷ்டி ேதே மி ர்உபதே பபடி ஸூரி னைத ீ தது ஸூரி ெ அக்ஷ பாத்திரம் ெ டுததுதும் )

சௌனகர் இவ்விதம் சொல்லியதைக்கேட்ட குந்திபுத்திரரான யுதிஷ்டிரர் பிராம்மணஸ்ரேஷ்டரும் கௌரவிக்கத்தக்க வாக்கியத்தை யுடையவரும் இன்சொல் சொல்லுபவரும் புரோகிதருமான தௌம்யருக்குச் சமீபத்தில்வந்து நமஸ்கரித்து ஸகோதரர் ளின் மத்தியில் பின்வருமாறு சொல்லலானார்: (வனத்தைக்குறித்துப்) புறப்பட்ட எங்களை வேதத்தி க ரயைஅடைந்த பிராம்மணர்கள் பின் தொடர்ந்து வந்திருக்கின்றார்கள். அதிக துக்கத்துடன் கூடிய நான் (இவர்களைப்) போஷிப்பதற்குச் சக்தியுள்ளவனாக இல்லை விடுவதற்கும் சக்தியுள்ளவனாகவில்லை. தானசக்தியும் எனக்கு இல்லை. ஓ பகவானே இந்த விஷயத்தில் என்னால் என்ன செய்யத்தகுந்தது? அதனை எனக்குச் சொல்லும் என்றார். யோகதர்மானுஷ்டானம் செய்கிறவர்களுள் சிறந்தவரான அந்தத் தௌம்யர் ஒரு முகூர்த்தம் தியானம் செய்து யோகத்தால் அந்த காரணத் தக்கண்டு யுதிஷ்டிர ரப் பார்த்துப் பின் வருமாறு சொல்லலானா

முற்காலத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிராணிகள் பசியால் மிகக் ஷ்டப்பட்டன அப்பொழுது ஸூரியன் பிதாவைப்போல அவற்றின் விஷயத்தில் தயையினுலே உத்தராயணம் சென்று கிரணங்களால் ஸங்களை எடுத்துத் தக்ஷிணாயனத்தைத் திரும்பவும் அடைந்து ஜலத்தால் பூமியை நிறைத்தான். பிறகு (சந்திரன்) க்ஷேத்திரமான அந்தப் பூமியில் ஸூரியனுடைய தேஜஸ்ஸை எடுத்து ஜலத்தால் ஓஷதிகளை உண்டுபண்ணினன். சந்திரன்தேஜஸினுல் (மேகத்தினுல்) நனைக்கப்பட்ட ஸூரியன் ஜகத்தை உண்டுபண்ணினன். ஆகையால் பரிசுத்தமான ஆறுரஸமுள்ள ஓஷதிகள் பூமியில் பிராணிகளுக்கு அன்னமாகின்றன. இவ்விதம் ஸூர்ய விகாரமான அன்னமன்றோ பிராணிகளுக்குப் பிராணதாரணமாகிறது. இந்த ஸூர்யன் எல்லாப் பிராணிகளுக்கும் ரக்ஷகன். ஆகையால் அவனைச் சரணமடை. பூர்ணமான தபத்தைச் செய்து பிறப்பாலும் செய்கையாலும் சுத்தியை அடைந்த எல்லாப் பிரஜைகளையும் மஹாத்மாக்களான அரசர்கள் காப்பாற்றுகிறார்கள். விரதானுஷ்டானத்துடன்கூடிய தியானத்திலிருக்கும் [1] பௌமன் கார்த்தவீர்யன் வேனபுத்ரனை பிருது நகுஷன் ஆகிய இவர்களால் பிரஜைகள் ஆபத்திலிருந்து காப்பாற்றப்பட்டன. பாரதரே அப்படியே தர்மாத்மாவான நீரும் கர்மாவால் சுத்தி அடைந்து தவத்தைச் செய்து தர்மத்தால் பிராம்மணர்களைக் காப்பாற்றும் என்றார். இவ்விதம் அந்தக்காலத்திற்கேற்ற வார்த்தையைத் தௌம்பர் சொல்லக் கேட்ட யுதிஷ்டிரர் அவரிடமிருந்து எல்லாப் புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடிய மந்திரத்தை உபதேசம் பெற்றார். அஷ்டாக்ஷரமென்னும் சிறந்த மந்திரமானது ஸம்ஸார துக்கத்தை அடைந்தவர்களுக்கு எப்போதும் பிரியமானது. பிராம்மணர்களுக்கு அன்னத்திற்காக நியமத்திலிருக்கிறவரும் மனத்தை அடக்கியவரும் உறுதியான வ்ரதமுள்ளவரும் (ஸ்நாத்தால்) சுத்தமான சரீரமுள்ளவருமான தர்மபுத்ரர் மேலான தவத்தைச் செய்தார். அந்த அரசர் புஷ்பமுதலிய பூஜைக்குரிய பொருள்களாலும் பலிகளாலும் ஸூர்யனைப் பூஜித்து ஸூர்யனுக்கு எதிர்முகமானர். தர்மாத்மாவான தர்மபுத்திரர் கங்கா ஜலத்தை ஆசமனம்செய்து இந்திரியங்களை ஜயித்துக் காற்றைப் புசித்து மனேவியாபாரத்தை நிறுத்தி ப்ராணயாமம் செய்து

கொண்டு நின்றார். பிறகு சுத்தரான அவர் சுத்தமான வாக்குக்களால் ஸ்தோத்திரம்செய்ய ஆரம்பித்தார்.

பானுவே நீர் ஜகத்துக்குக் கண்போன்றவர். எல்லாஜீவர்ளுக்கும் நீரே ஆத்மா. ஆகாசமுதலிய எல்லாப்பூதங்களுக்கும் காரணம் நீரே. கர்மானுஷ்டானம் செய்பவர்களுடைய ஆசாரமும் நீரே. எல்லா ஞானிகளாலும் அடையப்படுபவரும் நீரே. மனத்தை அடக்கும் யோகிகளுக்கும் நீரே முக்யகதி. கதவும் தாளும் இல்லாத மோக்ஷவாயிலும் நீரே. நீரே முமுக்ஷுக்களால் அடையப்படுபவர். உம்மால் உலகம் தரிக்கப்படுகிறது. உம்மால் உலகம் பிரகாசிப்பிக்கப்படுகிறது. உம்மால் சுத்தமாக்கப்படுகிறது; கைம்மாறுகருதாமல் உம்மால் காப்பாற்றப்படுகிறது. ஓ ரிஷிக்கூட்டங்களால் பூஜிக்கப்பட்டவரே வேதத்தின்கரைகண்ட பிராம்மணர்கள் காலத்தில் உம்மைத் தொழுதுநின்று தமக்குரிய வேதத்திற் சொல்லிய மந்திரங்களால் பூஜிக்கின்றார்கள். ஸித்தரும் சாரணரும் கந்தர்வரும் யக்ஷரும் குஹ்யகரும் பன்னகரும் வரத்தை அடைய விரும்பி ஆகாயத்தில் போகின்ற உம்முடைய திவ்யரதத்தைப் பின்தொடருகின்றார்கள். முப்பத்துமூன்றுதேவதைகளும் விமானத்தோடு சஞ்சரிக்கும் கணங்களும் இந்திரனும் உபேந்திரனும் உம்மைப் பூஜித்து ஸித்தியை அடைந்திருக்கிறார்கள். வித்தியாதரர்களுள் சிறந்தவர்கள் திவ்யமா r மந்தாரமாலைகளால் உம்மைப் பூஜித்து (இம்மையில்) சீக்கிரம் இஷ்டத்தை அடைந்து (மறுமையில்) உம்மையே அடைகிறார்கள். தேவலோகத்திலுள்ள குஹ்யகர்களும் தேவஸம்பந்தமும் மனுஷ்யஸம்பந்தமுமுள்ள ஏழு பித்ருகணங்களும் உம்மையே பூஜித்துச் சீக்கிரமாக மேன்மையை அடைகின்றார்கள். வஸுக்களும் மருத்துக்களும் ருத்ரர்களும் ஸாத்யர்களும் மரீசிபர்களும் வாலகில்யர் முதலிய ஸித்தர்களும் பிராணிகளுள் சிறப்பை அடைந்தார்கள். பிரம்மலோக முதலிய ஏழு உலகங்களிலும் மற்ற எல்லா உலகங்களிலும் ஸூர்யனுக்கு மேற்படும் பிராணி இருப்பதாக நான் நினைக்கவில்லை. வீர்யமுள்ளவைகளும் பெரியவைகளுமான வேறுபிராணிகளும் இருக்கின்றன. ஆனால், பிரகாசமும் மஹிமையும் உமக்கு எப்படியோ அப்படி அவைகளுக்கு இல்லை. ஒளிகளெல்லாம் உம்மிடத்தில் இருக்கின்றன. நீர் எல்லாத் தேஜஸுகளுக்கும் பதியானவர். பூமி ஜலம் தேயு வாயு ஆகாயம் புத்தி ஸத்வம் தர்மம், ஞானம் வைராக்கியம் ஐச்வரியம் முதலிய எல்லாம் உம்மிடத்தில் இருக்

கின்றன. விஷ்ணுவினால் அஸுரர்களின் கொழுப்பானது எந்த ஸுதர்சனமென்கிற சக்கரத்தால் நாசம்பண்ணப்பட்டதோ அது விச்வகர்மாவினால் உம்முடைய தேஜஸினால் செய்யப்பட்டது. நீர் கோடைக்காலத்தில் எல்லாப்பிராணிகளுடைய ஸாரத்தையும் எல்லா ஒஷதிரஸங்களுடைய ஸாரத்தையும் கிரணங்களால் எடுத்துத் திரும்பவும் மழைக்காலத்தில் விடுகிறீர். உம்முடைய சில கிரணங்கள் கொளுத்துகின்றன; சில தாபத்தைஉண்டுபண்ணுகின்றன; மழைக்காலத்தில் சில அப்படியே மேகங்களாகக் கர்ஜிக்கின்றன; மின்னுகின்றன; மழையையும் பெய்கின்றன. குளிராலும்காற்றாலும் பீடிக்கப்பட்ட பிராணிகளை உம்முடைய கிரணங்கள் எவ்விதம் சுகப்படுத்துமோ அவ்விதம் நெருப்பும் போர்வைகளும் கம்பளங்களும் ஸுகப்படுத்துகிறதில்லை. [1] பதின்மூன்று தீவுகளுடன் கூடிய பூமியைக் கிரணங்களால் பிரகாசப்படுத்துகிறீர். மூன்று உலகங்களின் க்ஷேமத்திற்குமாக நீர் ஒருவரே பிரவிருத்திக்கிறீர். உம்முடைய உதயமில்லாவிட்டால் இவ்வுலகமானது இருளடைந்து விடும். தர்மம் அர்த்தம் காமம் இவைகளில் புத்திமான்கள் பிரவிருத்தியார். பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களின் கூட்டங்களால் உம்முடைய அனுக்ரகத்தாலேயே அக்னிஹோத்ரம் பசுபந்தம் இஷ்டி மந்திரம் யாகம் தவம் முதலிய காரியங்கள் செய்து முடிக்கப்படுகின்றன; ப்ரம்மாவின் எந்தப் பகலானது ஆயிரம் யுகம் அளவுள்ளதென்று சொல்லப்பட்டிருக்கிறதோ அதற்கு முதலாயும் கடைசியாயும் நீரே இருக்கிறீரென்று கால (தத்துவ)ம் தெரிந்தவர்களால் சொல்லப்படுகிறீர். மனுக்களுக்கும் மனுபுத்ரர்களுக்கும் மனிதரில்லாத ஜகத்துக்கும் எல்லா மந்வந்தரங்களுக்கும் அவற்றிலுள்ள ஈச்வரர்களுக்கும் நீர் ஈச்வரர். பிரளய காலம் வந்தவுடன் உம்முடைய கோபத்தால் வெளிவந்த ஸம்வர்த்தகமென்னும் நெருப்பானது மூவுலகத்தையும் சாம்பலாக்கிவிட்டு நிற்கின்றது. உம்முடைய கிரணத்தாலுண்டான அநேக நிறமுள்ள பெரியமேகங்கள் ஐராவதமென்னும் மேகங்களுடனும் இடிகளுடனும் கூடிக்கொண்டு [3] நான்கு விதமான எல்லாப் பிராணிகளையும்

---

1 'ஸுதர்சனத்வீபம் முதலிய அ ரந்தரத்வீபங்கள் சேர் து பதி மூ று' எ பது ப ழயவு ர.

மே ளுக்கு மேலுள்ள மே களுக்கு ஐரா தமெ று பெயர்

3 அ ட ம் முட் டயிலிருந்து டா து தஜம் ே ர் யிலிருந்து டா து உத்பிஜ் ம் பூமி யப்பிளந்துண்டானது ராயு ருப் பயிலிருந்து டா து று ா குவிதமா

ஜலத்தில் முழுகச் செய்கின்றன. சரீரத்தைப் பன்னிரண்டாகப் பிரித்துக்கொண்டு பன்னிரண்டு ஸூரியராக இருக்கும் தன்மையை அடைந்திருக்கும் நீர் [1] ஒன்று சேர்ந்து ஒரே ஸமுத்திரமாயிருக்கிற யாவற்றையும் கிரணங்களால் உலர்த்திவிடுகிறீர். உம்மை இந்திரன் என்கிறார்கள்; நீரே ருத்ரர்; நீரே விஷ்ணு; நீரே பிரம்மா· நீரே அக்நி·ஸூக்ஷ்மமான மனமும் நீரே. புரபுவும் நீரே. நித்யமான ப்ரம்மமும் நீரே. நாசம் பண்ணுகிறவரும் நீரே; உண்டுபண்ணுகிறவரும் பிரகாசிப்பவரும் கிரணங்களின் வரிசையுள்ளவரும் [2] விருஷாகபியும் ஜகத்துக்கு இருப்பிடமானவரும் மேகரூபமாகி வர்ஷிக்கிறவரும் போஷிக்கிறவரும் மித்ரரும் தர்மரூபமானவரும் ஆயிரம்கிரணங்களுள்ளவரும் அதிதியின் புத்திரரும் தாபத்தை உண்டாக்குகிறவரும் கிரணங்களுக்குப் பதியும் நீரே. மார்த்தண்டரும் பூஜிக்கத்தக்கவரும் ரவியும் ஸூர்யரும் ரக்ஷகரும் பகலைச் செய்பவரும் பகலைப் பிரகாசமாக்குகிறவரும் ஸப்த என்ற குதிரையையுடையவரும் பிரகாசமான கிரணமுள்ளவரும் மிக்க ப்ரீதியை யுண்டுபண்ணுகிறவரும் விரைவாகச் செல்லுகிறவரும் இருளைப் போக்குகிறவரும் பச்சை நிறமுள்ள குதிரையை உடையவருமாகச் சொல்லப்படுகிறீர். ஸப்தமியிலோ அல்லது ஷஷ்டியிலோ எவன் வெறுப்பும் அஹங்காரமுமில்லாதவனாகிப் பக்தியுடன் (உம்மைப்) பூஜை செய்கிறானோ அந்த மனிதனை லக்ஷ்மி அடைகிறாள். எவர்கள் பூஜாகாலத்தில் வேறிடத்தில் மனத்தைச் செலுத்தாமல் உம்முடைய பூஜையையும் நமஸ்காரத்தையும் செய்கிறார்களோ அவர்களுக்கு ஆபத்துக்களும் மனோவியாதிகளும் உண்டாகா. உம்முடைய த்யானத்தில் பிரியமுள்ளவர்கள் எல்லா வியாதிகளாலும் விடுபட்டவர்களும் எல்லாப் பாவங்களாலும் விடுபட்டவர்களும் ஸுகமுள்ளவர்களும் வெகுகாலம் ஜீவிக்கின்றவர்களும் ஆகிறார்கள். ஓ அன்னபதியான ஸூர்யரே விருப்பங்களை நிறைவேற்ற முடியாத நிலையிலிருப்பவனும் சிரத்தையுடன் எல்லாருக்கும் அதிதிபூஜை செய்ய விருப்பமுள்ளவனுமாயிருக்கிற எனக்கு நீர் அதிகமாக அன்னத்தைக் கொடுக்கவேண்டும். உம்முடைய பாதமூலத்தை அடுத்தவர்களும் மின்னல் இடிகளை உண்டுபண்ணுகிறவர்களும் உம்மைத் தொடர்ந்து வருபவர்

---

1 ‘ ம்ஹ்ருத்ய ’ எ ' பது' மூலம்; ‘ ஸம்ஹாரம் செய் ’ ' ` ' ொ ' ள லாம்

2 சி ஞ ே ா விஷ்ணு ா ே ா இருப் 'வர்’ என்பது ப ழய வு ர.

களுமான மாடரன் அருணன் தண்டன முதலிய எல்லாப் பக்தர்களையும் தனித்தனி நமஸ்கரிக்கிறேன். (நிக்கிரகம் செய்யும்) க்ஷமை யென்னும் தேவதையுடன் கூடிய (அனுக்கிரகம் செய்யும்) மைத்ரியென்னும் தேவதை மற்றுமுள்ள [1]பூதமாதாக்கள் ஆகிய அவர்கள் யாவரையும் நமஸ்கரிக்கிறேன். சரணாகதனை என்னைக் காப்பாற்றுக என்றார்.

பிறகு கழுத்தளவு ஜலத்தில் நின்று மந்திரங்களாலும் ஸ்தோத்திரங்களாலும் சந்தோஷப்படுத்தப்பட்டவரும் அக்னி போலத் தமது சரீரத்தால் பிரகாசிக்கின்றவருமான ஸூர்யர் பிரீதியுடன் தர்மபுத்திரருக்குத் தரிசனம் அளித்தார். ஸூரியர் உனக்கு எது விருப்பமோ அது அனைத்தையும் நீ அடைவாய். பன்னிரண்டு வருஷம் நான் உனக்கு அன்னத்தைத் தருகிறேன். ஓ நராதிபனே என்னால் கொடுக்கப்பட்ட தாம்ரமயமான பரிமாறுகிற பாத்திரத்தைப் பெற்றுக்கொள். நல்ல விரதமுள்ளவனே திரௌபதியானவள் இப்பாத்திரத்துடன் எவ்வளவுகாலம்வரை அன்னமளிக்க விரும்புவளோ அதுவரை ஸித்தம் செய்யப்பட்ட பழம் கிழங்கு மாமிசம் கீரை லேகியம் சோஷ்யம் பக்ஷ்யம் பேயம் ஆகிய நான்குவிதமான உணவுப் பதார்த்தங்களும் சமையலறையில் உனக்குக் குறைவற்றிருக்கும். இதிலிருந்து பதினான்காவது வருஷத்தில் திரும்பவும் ராஜ்யத்தை அடைவாய் என்றார். பூஜ்யரான ஸூர்யர் இவ்விதம் சொல்லி அங்கேயே மறைந்துவிட்டார். தர்மத்தையறிந்த குந்திபுத்திரரோ வரத்தையடைந்து ஜலத்திலிருந்து கரையேறி தௌம்யரின் பாதங்களில் வணங்கித் தம்பிகளையும் ஆலிங்கனம்செய்து கொண்டார். அப்பொழுது பிரபுவான பாண்டுபுத்திரர் திரௌபதியுடன் சேர்ந்து (பாத்திரத்தைப்) பார்த்துக்கொண்டு சமைக்குமிடம்

---

1 கௌரி, பத்மை முதலியவர் ள் எ பதும் 'பிராம்மீ மாஹேஸ்வரீ முதலியவர்கள்' என்பது ப ழயவு ர சாந்தி பர்வம் 716 ம் பக் குறிப்பில் ாண் .

பிராம்மி மாஹேஸ் ரி, ஐந்த்ரி, வாராஹி, வஷ்ணவி ௌ ாரி சாமுண்டா, சர்ச்சிகா என எ மர் என்றும் பிராம்மி, வைஷ்ணவி ஐந்த்ரி ரௌத்ரி, வாராகி ௌ ளபேரி ௌ ளமாரி என எழு ர் என்றும் கௌரி, பத்மை சசி, மே த, ஸாவித்ரி, விஜயை ஜ ய, தேவஸேனை ஸ் த ஸ்வாஹை, சாந்தி, புஷ்டி, த்ருதி, துஷ்டி, ஆத்மதேவ த ( இஷ்டதேவதை) குலதேவ த னப்பதினாறு ர் எ றும் மூ றுவித மர் கூறு து சப்த ல்ப த்ருமம்

சென்று அன்னத் தச் சித்தம்செய்தார். சமையல் செய்யப்பட்ட நான்குவிதமான சிறிது அன்னமும் வளர்வதாயிற்று. அன்னம் கு றவில்லாமலும் வளர்ந்தது. அந்த அன்னத்தால் பிராம்மணர் களைப் போஜனம் செய்வித்தார். தர்மபுத்ரர் பிராம்மணர்கள் சாப்பிட்டபிறகு தம்பிகளையும் போஜனம் செய்வித்து விகஸ மென்று பெயருள்ள மிஞ்சின அன்னத்தைப் பின்பு புஜித்தார். தர்மபுத்திரரை உண்பித்து மிஞ்சின தத் திரௌபதி புஜித்தாள். திரௌபதி சாப்பிட்டவுடன் அதில் அன்னம் இல்லாமற் போய் விடும். சூரியனுக்கு ஒப்பான காந்தியுள்ள பிரபுவான தர்மபுத்திரர் இவ்விதம் சூரியனிடமிருந்து (அப்பாத்திரத்தை) அடைந்து மனத் தினால் எண்ணப்பட்ட ஸகலவஸ்துக்களையும் பிராம்மணர்களுக்குக் கொடுத்தார். பாண்டவர்கள் உபாத்தியாயரை முன்னிட்டு (விசே ஷமான திதிகளிலும் நக்ஷத்திரங்களிலும் பர்வங்களிலும் விதிவாக் யங்களையும் மந்திரங்களையும் ப்ரமாணமாகக்கொண்டு யாகம் செய் யவும் ஆரம்பித்தார்கள். பிறகு பாண்டவர்கள் [1] க்ஷேமத்தையுடை யவர்களாகித் தௌம்யருடன் பிராம்மணக்கூட்டங்களால் சூழப் பட்டுக் காம்யகமென்னும் வனத்தைக்குறித்துச் சென்றார்கள்' என்றார்.

ஜனமேஜயர் பிரம்மரிஷியே புலன்களை அடக்கினவரும் பிராணன்களை அடக்கினவருமான அந்த யுதிஷ்டிர அரசர் பிராம் மணர்களுக்காக மிகுதியான புஷ்பங்களாலும் காணிக்கைகளாலும் பலிகளாலும் முறைப்படி பூஜித்து ஸர்வாத்மாவும் ஆச்சரியமான பராக்ரமமுள்ளவனுமான ஸூரியனை எந்த ஸ்தோத்திரத்தால் ஆராதித்தார்? பூஜ்யரான பிராம்மணரே என்னிடத்தில் ஸ்நேக மிருக்குமானாலும் நான் அனுக்ரஹத்தை அடைந்தவனானாலும் மறைக்கக் கூடியதாக இல்லாவிடில் இப்பொழுது எனக்கு அதைச் சொல்லவேண்டும்' என்றார். வைசம்பாயனர் அரசரே சுத் தராயிருந்து ஒரே இடத்தில் மனத்தை நிறுத்தி ஸாவதானமாகக் கேளும். ராஜச்ரேஷ்டரே வேறு வேலையில்லாமலிரும். உமக்கு நன் ம யுத்தரும் ஒரு ரகஸ்யத்தைச் சொல்லுகின்றேன். பூப தியே நல்ல சிறந்த புத்தியுள்ள குந்திபுத்திரரான யுதிஷ்டிரருக் குத் தௌமியரால் சொல்லப்பட்ட புண்ணியமான [2] நூற்றெட்டு நாமாக்களைக் கேளும்.

---

1 'ஆசீர்வாதம் செய்யப்பட்டவர் ளாய்' என்பதும் பொருள்.

2 பி ' வரும் நாமா ' ளை ண்ண நூற்றிருபத்து ான்கு ஆகின்றன.

ஸூர்யர் அர்யமர் பகர் த்வஷ்டா பூஷா அர்க்கர் ஸவிதா ரவி கபஸ்திமான் அஜர் காலர் ம்ருத்யு, தாதா ப்ரபாகரர் ப்ருதிவீ ஆபர் தேஜஸ் கம் வாயு பராயணர் ஸோமர் ப்ருஹஸ்பதி சுக்ரர் புதர் அங்காரகர் இந்திரர் விவஸ்வான் தீப்தாம்சு சுசி சௌரி சனைஸ்சரர் ப்ரம்மா விஷ்ணு ருத்திரர் ஸ்கந்தர் வைஸ்ரவணர் யமர் வைத்யுதர் ஜாடரர் அக்னி ஐந்தனர் தேஜஸாம்பதி தர்ம த்வஜர் வேதகர்த்தர் வேதாங்கர் வேதவாஹனர் க்ருதம் திரேதை துவாபரம் கலி ஸர்வாமராஸ்ரயர் கலை காஷ்டை முஹூர்த்தம் பக்ஷம் மாஸம் ருது ஸம்வத்ஸரகரர் அஸ்வத்தர் காலசக்ரர் விபாவஸு புருஷர் சாஸ்வதர் யோகி வ்யக்தாவ்யக்தர் ஸநாதனர் லோகாத்யக்ஷர் ஸுராத்யக்ஷர் விஸ்வகர்மா தமோனுதர், வருணர், ஸாகரர் அம்சர் ஜீமூதர் ஜீவனர் அரிஹர் பூதாஸ்ரயர் பூதபதி ஸர்வபூத நிஷேவிதர் மணி ஸுவர்ணர் பூதாத்மா, காமதர், ஸர்வதோமுகர் ஸ்ரஷ்டா ஸம்வர்த்தகர் வஹ்நி ஸர்வஸ்யாதி அலோலுபர் அனந்தர் கபிலர் பாநு காமதர் ஸர்வதோமுகர் ஜயர் விசாலர் வரதர் ஸர்வதாதுநிஷேசிதர் மனம், ஸுபர்ணர் பூதாதி சீக்ரகர் பிராணதாரகர் தன்வந்தரி தூமகேது, ஆதிதேவர் அதிதேஸ்ஸுதர் துவாதசாத்மா அரவிந்தாக்ஷர், பிதா, மாதா, பிதாமஹர் ப்ரஜாத்வாரர் மோக்ஷத்வாரர், ஸ்வர்க்கத்வாரர் த்ரிவிஷ்டபர் தேவகர்த்தர் ப்ரசாந்தாத்மா, விஸ்வாத்மா விஸ்வதோமுகர் சராசராத்மா ஸூக்ஷ்மாத்மா, மைத்திரேயர், கருணாந்விதர் என்பன. துதிக்கத்தக்கவரும் அதிக தேஜஸுள்ளவருமான ஸூரியருடைய இந்தப் புண்யமான நூற்றெட்டு நாமங்கள் மகாத்மாவான இந்திரனால் சொல்லப்பட்டன. இந்திரனிடமிருந்து நாரதர் அடைந்தார். பிறகு தௌம்யர் அடைந்தார். தௌம்யரிடமிருந்து யுதிஷ்டிரரடைந்து எல்லாவிருப்பங்களையும் அடைந்தார். தேவகணங்கள் பிதுருக்கள் யக்ஷர்கள் இவர்களால் வணங்கப்பட்டவரும் அஸுரர்களாலும் ராக்ஷஸர்களாலும் ஸித்தர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவரும் மேலான தங்கத்திற்கும் அக்னிக்குமொப்பான காந்தியுள்ளவருமான சூரியரை நீரும் மனத்தில் தியானம் செய்யும். எவன் ஸூர்யோதயகாலத்தில் நன்கு மனத்தை அடக்கிக்கொண்டு இதனைப்படிப்பானோ அவன் எப்பொழுதும் புத்திரன் ஸ்திரீ, தனம், ரத்தினக்குவியல் இவர்களை அடைவன். எப்போதும் முற்பிறப்பை அறியும் தன்மையையும்

தைரியத்தையும் மேதையையும் அடைவான். எந்தமனிதன் தேவஸ்ரேஷ்டரான ஸூர்யனுடைய இந்த ஸ்தோத்திரத்தைச் சுத்தனும் நல்ல மனமுள்ளவனுமாகித் தியானம் செய்துகொண்டு சொல்லுவானோ அவன் காட்டுத்தீப்போன்ற துக்கஸாகரத்திலிருந்து விடுபடுகிறான். மனத்தால் விரும்பப்பட்டபடி இஷ்டங்களை அடைவான். இந்த ஸ்தோத்திரத்தைச் சுத்தமுள்ளவனாக எவனானாலும் ஒருவரனை விரும்பிக்கொண்டு த்யானத்துடன் இவ்வுலகில் படிப்பனானால் ஸூரியனும் அவனுக்கு அவ்விருப்பத்தைக் கொடுப்பான். அது கிடைப்பதரிதானாலும் அப்பொழுதே அடைந்துவிடுகிறான். புருஷனோ அல்லது ஸ்திரீயோ எப்பொழுதும் மனத்தில் பதியச் செய்பவரும் அடிக்கடி கேட்பவரும் புத்திரனைவிரும்பினால் புத்திரனை அடைவர்; செல்வத்தை விரும்பினால் செல்வத்தையடைவர்; வித்தையை விரும்புகிறவர் வித்தையையும் அடைவர். ஆபத்தையடைந்த ஸ்திரீயோ அல்லது புருஷனோ ஒவ்வொரு நாளும் இரண்டுசந்தியிலும் படித்தால் அந்த ஆபத்திலிருந்து விடுபடுகிறார். கட்டுண்டவன் கட்டிலிருந்து விடுபடுகிறான். யுத்தத்திலும் எப்பொழுதும் ஜயத்தை அடைவன். அதிகமான செல்வத்தையும் அடைவன். எல்லாப் பாவத்திலிருந்தும் விடுபடுகிறான். ஸூர்யலோகத்தை அவன் அடைகிறான்.

## நான்காவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம (தொடர்ச்சி)

(பாண்டவர்கள் வனஞ்சென்றபின் திருதராஷ்டிரன் விதுரரை ஆலோசனை கேட்டதும் விதுரர் பாண்டவர்களை அழைத்து ராஜ்யத்தில் ஸ்தாபிக்கச் சொல்லியதும் திருதராஷ்டிரன் விதுரரை நிந்தித்ததும் விதுரர் பாண்டவர்களிடம் சென்றதும்)

பிறகு பாண்டவர்கள் காட்டையடைந்தவுடன் அறிவைக் கண்ணாகவுடையவனும் அம்பிகையின் புத்திரனுமான திருதராஷ்டிரராஜன் தாபத்தையடைந்து ஸுகமான ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு தர்மசிந்தையுள்ளவரும் ஆழ்ந்த புத்தியுள்ளவருமான விதுரரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான். 'சுக்கிராசாரியருடைய அறிவுபோல உன்னுடைய அறிவும் சுத்தமானது. நுட்ப

மானதும் மேலானதுமான தர்மத்தையும் நீ அறிவாய். குருவம்சத்தில் உதித்தவர்களுக்கு நீ பொதுவானவனென்றும்எண்ணப்பட்டவன். விதுர இவ்விதம் நடந்திருக்கையில் இப்பொழுது எதுசெய்யத்தக்கது? இந்தப்பட்டணத்து ஜனங்கள் எவ்விதம் நம்மை அநுஸரிப்பார்கள்? அந்தப் பாண்டவர்களும் நம்மை வேருடன் நாசம் செய்யாமலும் நானும் அவர்களை நாசம் செய்ய விரும்பாமலும் அவர்களுக்கும் எனக்கும் நன்மையானதைச்சொல்லு. க்ஷத்தாவே துர்யோதனனுக்கு நன்மையை விரும்பினவனும் பாவியுமான சகுனியாலேயே தீங்கு செய்யப்பட்டது. அப்படிச் செய்யப்பட்டது எனக்கு விருப்பமில்லாதது. ஆகையால் அவ்விதமே அங்கீகரிக்கப்பட்ட அவ்விஷயத்தில் நீ பரிகாரம் சொல்லவேண்டும். காலத்துக்கேற்றவாறு வேறு எதை இனிமேல் உசிதமாக நினைக்கிறாய்? எந்தத் தர்மவிஷயத்தில் பாண்டுபுத்திரர்கள் யாவரும் காட்டையடைந்து கஷ்டப்படுகின்றார்களோ (அந்தத்) தர்ம விஷயத்தில் உதவும்படி இல்லையே என்று என்மனம் வெடிக்கின்றது. என்று கேட்டான்.

விதுரர் சொல்லுகிறார்: 'நரேந்திரரே இந்தத் தர்மார்த்த காமங்கள் தர்மத்தைக் காரணமாகவுடையவை. இந்த ராஜ்யத்துக்கும் தர்மம் மூலமென்று சொல்லுகின்றார்கள். அரசரே உமது சக்திக்கேற்றவாறு தர்மத்திலிருந்துகொண்டு உம்முடைய எல்லாப் புத்திரர்களையும் குந்தியின் புத்திரர்களையும் காப்பாற்றும். அந்தத் [1]தர்மமானது சகுனியை முக்கியமாயுடைய தீயசிந்தையுடையர்களால் ஸபையில் வஞ்சிக்கப்பட்டது. உமது புத்திரன் சூதாட்டத்திற்கு அழைத்துச் சத்தியசந்தனை குந்தியின் புத்திரனைத் தோல்வியடைவித்தனன். கௌரவரே அரசரே உமது புத்திரன் பாவத்திலிருந்து விடுபட்டு உலகத்தில் நன்கு நிலைபெறும்படி உம்மால் கபடமா யுண்டுபண்ணப்பட்ட இந்தத் துவேஷ நிவிருத்தியின் உபாயத்தை நான் நன்கு ஆலோசிக்கின்றேன். அரசரே உம்மால் கொடுக்கப்பட்டவற்றையெல்லாம் பாண்டு புத்திரர்கள் அ டயட்டும். அரசன் தன்னுடையதிலேயே சந்தோஷிக்க வேண்டும்; பிறர் செல்வத்தில் இச் ச வைக்கக்கூடாது ' என்பது மேலான தர்மம். இவ்விதம் செய்யப்பட்டால் உம்முடைய புகழ் அழியாது. ஞாதிகளுள் கலக முண்டாகாது. தர்மம் உண்டா ா

---

1 தர்ம:' எ ' பது மூலம்' அந்தத் தர்மரூபியான யுதிஷ்டிரர் எ ' பது ப ழயவு ா

